# இயலிசை


தனி பிரதி விலை 0-50 காசுகள்
ஆண்டு சந்தா ரூ. 10
அரையாண்டு சந்தா ரூ. 5

சிறப்பாசிரியர் :
சிதம்பரம் S. மீனாட்சிசுந்தரம்

துணை ஆசிரியர் :
K. P. இளங்கோவன்

' இயலிசை '
57, தெற்கு சிவன் கோவில் தெரு,
கோடம்பாக்கம், சென்னை-24.

மலர் 3 | 1-7-84 | இசைக்கலை தமிழ் மாதமிருமுறை | ஆனி இதழ் | இதழ் 5-6


## சிதம்பரத்தில் நடந்த சிங்கார கலை விழா



இறைவனையே, நாட்டியமாடும் நிலையில் நிறுத்தி வணங்கப்படுவது தமிழகத்தில்தான் அதன் நாயகன் தில்லையில்தான். வேறு எந்த இந்திய மாநிலத்திலாவது ஆண்டவனை நடனமாடும் நிலையில் வைத்துள்ளார்களா?

ஆடற்கலை பிறந்தது தமிழகம்தான் என்பதற்கு இதைவிட வேறு சான்று என்ன வேண்டும். அதனால்தான் தில்லைத் திருக்கூத்தன் -நடராசன் என்றெல்லாம் சிதம்பர தெய்வம் பாடப்பெறுகின்றது அந்த தில்லையிலே கடந்த 4 ஆண்டுகளாக ஓர் ஆடற்கலை விழா 'நாட்டியாஞ்சலி' என்ற பெயரில் நடைபெற்று வருகின்றது. 1981-ல் டாக்டர் இரா. நாகசாமி, தொழியியல் வல்லுநர், மத்திய அரசு துணை செயலாளர் திருமதி கபிலா, தில்லைப்பெரியார் வாகீசம்பிள்ளை இவர்களின் முயற்சியால் துவங்கப்பெற்ற இவ்விழாவில் ஏராள புகழ்மிக்க நடனமணிகள் வருடந்தோறும் கலந்து தங்கள் திறமையை காட்டுகின்றனர்.

இவ்வருடம் மே மாதம் சபாநாயகர் திருக்கோவில் உள்ளே இவ்விழா நடைபெற்றது. விழாவில் குமாரிகள் ஜெயந்தி ராமானுஜம், ஜெயந்தி ராசகோபால், சித்ரா விஸ்வேஸ்வரன், உமா ஸ்ரீராம், ராஜஸ்ரீ குருசாமி, காஞ்சனா கௌரி, கலா நாராயணன், உஷா சீனிவாசன், அலர்மேல் வள்ளி, செல்வி அருணா I.A.S. இவர்களும் பத்மா சுப்ரமணியம், சுதாராணி ரகுபதி, உமா தண்டாயுதபாணி, எஸ். கே. ராசரத்னம் மாணவிகளும் நடனமாடினர்.

ஏராள ரசிகர்கள் ஆயிரக்கணக்கில் கூடி ரசித்தனர்.

## திருஞான சம்பந்தர் இசை விழா!

திருக்கழுக்குன்றம் நால்வர் திருக்கோவிலில் திருஞான சம்பந்தர் இசை விழா 3 நாட்கள் நடைபெற்றது. முதல்நாள் நிகழ்ச்சிக்கு தமிழக அறநிலையத்துறை கமிஷனர் அருணுடைய பிள்ளை தலைமை தாங்கினார்.

விழாவின் சட்டமன்ற உறுப்பினர் அனூர் ஜெகதீசன், அமைச்சர்கள் இராம. வீரப்பன், செ. அரங்கநாயகம், டி. வி நாராயணசாமி உயர்நீதிமன்ற நீதிபதி செங்கோட்டு வேலன், ஔவை. நடராசன் உட்பட பலர் கலந்து கொண்டனர்

திருமுறையரங்கு 3 நாட்களும் நடைபெற்றன. அதில் தமிழகத்தின் பல திருக்கோவில்களைச் சார்ந்த ஓதுவாமூர்த்திகளும் தருமபுரம் சுவாமிநாதன், பூதபாண்டி தங்கவேல், வி. சோமசுந்தரம், காஞ்சிபுரம் விநயக முதலியார், சேலம் எஸ். ஜெயலட்சுமி, சிதம்பரம் எஸ். மீனாட்சி சுந்தரம், மற்றும் பலரும் கலந்து கொண்டனர், செம்பொன்னார் கோவில் சகோதரர்கள் நாதசுரம் வாசித்தனர்.

விழாவில் விரிவான ஏற்பாடுகளை, சேலம் எஸ். ஜெயலட்சுமி, வேதசிரீசுவர கோவில் தக்கார் டி. வி. சுந்தரமூர்த்தி, செயல் அலுவலர்கள் பி. இராமகிருஷ்ணர். மு. ராமகிருஷ்ணன், ராஜு ஆகியோர் செய்து இருந்தனர். பல ஊர் பிரமுகர்கள், ரசிகர்கள் வந்து நிகழ்ச்சிகளைச் சிறப்பித்தனர்.

## திறமையான கலைஞர்கள் ஊக்கத்திட்டம்

### இயல் இசை நாடக மன்றம் அறிவிப்பு

சென்னையில் இயங்கிவரும் தமிழக அரசு இயல் இசை நாடக மன்றம் 1984-85ஆண்டில்திறமையான கலைஞர்களை ஊக்கப்படுத்தல்; நல்ல சங்கீத சபைகள், சங்கீத நடனபயிற்சி பள்ளிகள் இவற்றுக்கு உதவி மானியம் அளித்தல் ஆகிய திட்டங்களை அறிந்துள்ளது.

திறமையான கலைஞர்களுக்கு சங்கீத சபைகள் மூலமாக ஊக்கம் அளிக்கும் திட்டத்தின் கீழ் வாய்ப்பாட்டு, பரத நாட்டியம், வீணை; புல்லாங்குழல், நாதசுரம், கதாகாலட்சேபம், கோட்டு வாத்தியம், கிளாரினெட், ஜலதரங்கம், வயலின், மிருதங்கம், கஞ்சிரா, கடம், முகர்சிங், கொன்னக்கோல் ஆகிய கலைஞர்கள் பங்கு பெறலாம். இசைத்துறையில் பங்குபெறும் கலைஞர்கள் 18 வயதுக்கு மேற்பட்டு இருக்கவேண்டும். பரத நாட்டியத்துறையில் பங்குபெறும் கலைஞர்கள் 15 வயது முதல் 30 வயது வரை இருக்கவேண்டும். கலைஞர்கள் மன்றத்தில் நேர்முகத் தேர்வு மூலம் தேர்ந்தெடுக்கப்படுவார்கள்.

தேர்ந்தெடுக்கப்பட்ட கலைஞர்கள் ஒவ்வொருவருக்கும் மன்றத்தால் தேர்ந்தெடுக்கப்பட்ட சபைகள் மூலம் நான்கு நிகழ்ச்சிகள் வழங்குவதுடன், கலைஞர்கள் ஒவ்வொருவருக்கும் ஊதியமும் நிர்ணயிக்கப்பட்டுள்ளது.விவரம் திட்டத்தில் காணலாம், மன்றத்தால் தேர்ந்தெடுக்கப்படும் மேற்படி கலைஞர்களின் நிகழ்ச்சிகளை நடத்த பதிவு செய்யப்பட்ட சபைகள் மட்டும் விண்ணப்பம் செய்யலாம். ஒவ்வொரு சபைக்கும் குறைந்தது நான்கு கலை நிகழ்ச்சிகள் வழங்குவதுடன், கலைஞர்களுக்கும் சபைக்கும் ஊதியமும் வழங்கப்படும் விவரம் திட்டத்தில் காணலாம். நேர் முகத் தேர்வு சென்னையில் நடக்கும். தேதி விவரங்கள் பின்னர் அறிவிக்கப்படும்.

**சங்கீத—நடனப் பயிற்சிப் பள்ளிகளுக்கு உதவி மான்யம் அளிக்கும் திட்டம்:**

மேற்கண்ட திட்டங்களின் மூலம் பயன்பெற விரும்பும் தகுதி பெற்ற கலைஞர்கள், சங்கீத சபைகள், சங்கீத நடனப் பயிற்சி நிலையங்கள் திட்ட விதிமுறைகளையும் விண்ணப்பப் பாரங்களையும் பின்வரும் முகவரிக்கு எழுதிப் பெற்றுக்கொள்ளலாம்:-

''செயலாளர், தமிழ்நாடு இயல்இசை நாடக மன்றம்,
''தென்றல்'', கிரீன்வேஸ் சாலை, சென்னை-600 028.

பூர்த்தி செய்யப்பட்ட மேற்படி விண்ணப்பங்கள் தபால் மூலம் மன்றத்திற்கு வந்து சேர வேண்டிய கடைசி தேதி 10-8-1984. குறிப்பிட்ட தேதிக்கு மேல் தாமதமாக வரும் விண்ணப்பங்கள் ஏற்கப்படமாட்டாது.

### நாதசுரமேதை திருவிழிமிழலை பெரியவர் மறைவு

தஞ்சை மாவட்டம் திருவிழிமிழலை ஊரில் திருவிழிமிழல் சகோதரர்கள் என பெயருடன் நாதசுர இசை உலகில் புகழுடன்பலகாலம் விளங்கியவர்கள். சுப்ரமணிய பிள்ளை-நடராச சுந்தரம் பிள்ளை சகோதரர்கள். இவர்களுக்கு ஏராள பட்டங்கள்,அரசாங்க விருதுகள் வழங்கப்பட்டன.

இதில் 90 வயதினைத் தாண்டிய பெரியவர் சுப்ரமணிய பிள்ளை கடந்த மாதம் திருவிழிமிழலையில் காலமானார்.ஏராள நாதசுர தவில் கலைஞர்கள் இசைக்கலைஞர்கள்ரசிகப் பெருமக்கள் வந்து அவருக்கு இறுதி அஞ்சலி செலுத்தினர்.

### தவில் கலைஞர் திருப்பதி முனிராமையா மறைவு

பிரபல தவில் கலைஞர் சி.எம். முனிராமையா 27-5 84 அன்று திருப்பதியில் அகால மரணமடைந்தார். இவர் திருப்பதி-திருமலை கோவில்களுக்கு ஆஸ்தான தவில் கலைஞராக இருந்தவர். ஆந்திர அரசு விருதுகளைப்பெற்றவர்.

அவரது இறுதி ஊர்வலத்தில் தமிழக நாதசுர தவில் கலைஞர்களும் வந்து கலந்து கொண்டனர். குடியாத்தம் இசைக்கலைஞர்கள் சங்கம் அவரது மறைவு குறித்து இரங்கல் தீர்மானம் நிறைவேற்றினர்

## கல் ஒன்று கனிகள் இரண்டு

இசைக்கலையை வாழ்க்கையில் பல நிலைகளிலும் பயன்படுத்திக் கொண்டனர் என்றாலும் திருக்கோயில்களில்தான் அதன் பயன் அதிகமாக இருந்தது. இசையில் ஓர் கவர்ச்சி இருந்ததால் சமயத்தை வளர்த்த பெரியார்கள் அனைவரும் மக்களுக்கு இசைப் பாடல்கள் மூலம் தங்கள் சமய போதனைகளைச் சொன்னார்கள். சிலர் இசையே இறைவன் வடிவம் என மிகைப்படுத்தியும் சொன்னார்கள்.

எனவே அன்றும் இன்றும் என்றும் இறையுணர்வையும், இசைக்கலையையும் வளர்க்கும நிலையமாக திருக்கோவில்கள் விளங்குகின்றன. ஆனால் கோயில்களின் தனித்தன்மை-புனிதம்-எந்தக்கலையின் பெயராலும் கெடக்கூடாது என்பதில் யாருக்கும் மாறுபட்ட கருத்து இருக்க முடியாது. 1937 ல் திருக்கோவிலுக்குள் சதுர்க்கச்சேரி நடனங்கள் நடத்தக் கூடாது என்று ஆங்கிலேய அரசினர் சட்டம் கொண்டு வந்ததும் இந்த அடிப்படையில்தான்.

இன்று தமிழகத்தில் அடிப்படை இசைக்கலையை CLASSI-CAL MUSIC காப்பாற்றுவது இசைக்கழகங்களும் (SABHAS) திருக்கோவில்களும்தான். எனினும் இதில் சமீபகாலமாக திருக்கோவில்களில் சில தவறுகள் நடைபெறுவதனை 'இயலிசை' சுட்டிக்காட்ட வேண்டியது தன் கடமையாகும்.

திருக்கோவில் திருவிழாக்களில் அடிப்படை இசைக்கச்சேரிகளைய நடத்தி வந்தவர்கள் மெல்லிசை, பக்திபாடல்கள் என்ற பெயரில் தரங்குறைந்த இசை நிகழ்ச்சிகளை ஏற்பாடு செய்கின்றனர். தற்பொழுதோ நேரே திரை இசைப்பாடகர்களே, மேல் நாட்டு இசைக்கருவிகளுடன் திருக்கோவில் மண்டபங்களில் 'சகல விதமான' பாடல்களுடன் பாடி திருவிழாக் கொண்டாட ஆரம்பித்து விட்டனர். அந்த இசைக் குழுவினரில் வருபவர் பலர் வேறு சமயத்தை சார்ந்தவர்களாவும் இருக்கின்றனர். அக்குழுவினரில் வரும் சிலரிடம் சில ஒழுங்கீனங்களும் இருக்கும். அக்கச்சேரிகள் 'சுராங்கனி' என்ற பாடலுடனும் முடியலாம். 'ஓசிபீசா' பாடலுடனும் முடியலாம். ஆண்டவன் பொறுத்துக்கொள்ளவேண்டும். இவர்களின் சன்மானம்—கச்சேரி தொகை பல ஆயிரங்கள்.

இதுபற்றி ஒருகோயில் அறங்காவலரைக் கேட்டபொழுது, ''கூட்டம்வரும் கச்சேரியை வைக்கின்றோம், அவ்வளவுதான்'' என்றார். அவர் தன் கோவில் உற்சவத்தில் ஓர் மாயாஜால மந்திரவித்தை MAGIC SHOW நிகழ்ச்சியும் வைத்தவர் கோவிலுக்கு கூட்டம்தான் வேண்டுமென்றால் இசைத்தட்டு நடனம் RECORD DANCE வைத்துவிடலாமே!

திருக்கோவில் பெருமக்களே! உங்களை 'இயலிசை' அடிபணிந்து வேண்டுகின்றது.

திருக்கோவிலில் எந்த பாடகரும் வந்து பாடட்டும், எந்த இசைக் கருவியாளரும் வந்து வாசிக்கட்டும். திருமுறைப்பாடல்களைப் பாடச்சொல்லுங்கள் அல்லது தரமான பக்தி பாடல்களைப் பாடச் சொல்லுங்கள். அடிப்படை இசையை வளர்க்கச் சொல்லுங்கள். கலையும் வளரும், தெய்வீகமும் தழைக்கும். கல் ஒன்று கனி இரண்டு.

இவ்விதியை நடைபாதை முச்சந்தி கோயில்களில் தளர்த்திக் கொண்டாலும் கோவில் எல்லைக்குள், மண்டபங்களில் நடைபெறும் நிகழ்ச்சிகளில் இந்தக் கட்டுப்பாட்டை அவசியம் கொள்ளவேண்டும். பெரும் ஆன்மீகப் பரம்பரையில் வந்துள்ள இன்றைய தமிழக இந்து சமய அறநிலையத்துறை ஆணையாளர் அவர்களும அறத்துறையைச் சார்ந்த திருக்கோவில் அலுவலர்களுக்கு தக்க அறிவுரை வழங்க வேண்டுகின்றோம்.

---

சிதம்பரம்

### அருணகிரிநாதர் இயலிசை மன்ற ஆண்டு விழா

சிதம்பரத்தில் நான்கு ஆண்டுகளாக நடைபெற்று வரும் அருணகிரிநாதர் இயலிசை மன்ற ஆண்டுவிழா 4-7-84 அன்று மாலை மேலவீதியில் நடைபெற உள்ளது. ஆறுமுக நாவலர் கட்டளைச் செயலாளர் க. சுவாமி நாதன் B. Sc., B. T. தலைமையில் தமிழாசிரியர் தி. பொன்னம்பலம் அருணகிரிநாதர் பற்றி உரையாற்றுவார்.

இரவு அண்ணாமலைப் பல்கலைக்கழக வயலின் விரிவுரையாளர் டி. எஸ். துரைசாமிப்பிள்ளையவர்களின் செல்வர்கள் டி. சுவாமிநாதன், டி. பாலசுப்ரமணியம் இரு வயலினிசை நடைபெற உள்ளது இதற்கு திருப்புன்கூர் மாஸ்டர் டி. ஒய். முத்துக்குமாரசாமி தவிலும் கோவை ஜி. பிரகாஷ் மிருதங்கமும், திருப்புகலூர் எஸ். வெங்கட்ரமணி கடமும் வாசிக்கின்றனர்' தையற்கலைஞர் எஸ். ஆறுமுகம், மன்ற செயலாளர் விழா ஏற்பாடுகளைச் செய்துள்ளார்.

---

### இயலிசை வாழ்க!



முத்தமிழின் பிரிவுகளாம் மூத்த இயல் இசைக்கு
தித்திக்கும் தமிழிலே தங்களிரு முறையிதழாய்
'இயலிசை' என்கின்ற இனியதொரு அழகிய
பெயரினிலே வரும் இதழே! பெருமையுடன் வளர்க!

இன்னிசைச் செல்வராம் மீனாட்சி சுந்தரனார்
தன்னுடைய உழைப்பாலும் தளராத முயற்சியாலும்
படைத்துவரும் 'இயலிசை' யாம் பாங்கான நல்லிதழ்தான்
தடையின்றி வளர்ந்து தழைத்தோங்க வாழ்த்துகிறேன்

—கு. சண்முகசுந்தரன்

---



---

இசைவேளாளருக்கு

## இசைத்துறை வேலை வாய்ப்புகளில் முன்னுரிமை

தமிழக மிகப்பிற்படுத்தப்பட்டோர் கூட்டமைப்புக்கோரிக்கை

சென்னை மிகப்பிற்படுத்தப்பட்டோர் MOST BACKWARD CLASS கூட்டமைப்பு திருகோலப்பா MLC தலைமையில் இயங்கிவருகின்றது இதன் செயலாளராக புலவர் மங்களமன்னன் அவர்களும், பொருளாளராக பொன் இராமச்சந்திரன் அவர்களும் பணியாற்றுகின்றனர். தமிழகத்தில் உள்ள 39 மிகப்பிற்படுத்தப்பட்ட சமுதாயங்களின் பிரதிநிதிகள் உள்ளனர் தமிழக இசைவேளாளர் சங்கம் சார்பில் சிதம்பரம் எஸ். மீனாட்சி சுந்தரம் இதில் உறுப்பினராக உள்ளார்.

தமிழக அரசால் அமைக்கப் பெற்ற அம்பாசங்கர் பிற்பட்டோர் நலக்குழுவிற்கு இக்கூட்டமைப்பு பல கோரிக்கைகள் வைத்துள்ளனர் அதில் தமிழகத்தில் இசைத்துறைச் சார்ந்த வேலைகளுக்கு இசையே தொழிலாகக்கொண்டு தமிழக இசைக்கலையைப் போற்றி வளர்த்துவரும் இசைவேளாளர் சமுதாயத்தைச் சார்ந்தவர்கள் மனு செய்தால் முன்னுரிமை வழங்கி அவர்களுக்கு வேலை வழங்கவேண்டும் என்ற கோரிக்கையையும் சேர்த்துள்ளனர்.

மாநில அரசு பள்ளிகள், மகளிர் கல்லூரிகள், இசைக் கல்லூரிகள், பல்கலைக்கழகங்கள் இவற்றிலும் மத்திய அரசு வானொலி நிலையங்களிலும்நிறைய வேலை வாய்ப்புகள் உள்ளன.

கலைத் தொடர்கதை

# ஆடலரசி அமரம்

## 15. வெண்ணையும் நெய்யும்

இன்று சென்னை மாநகரம் தமிழக்கலைகளின் கேந்திரமாக விளங்குவது போல அன்று தஞ்சாவூர் நகரம்தென்னகக்கலைகளின் இருப்பிடமாக விளங்கியது. நடன நாதசுர குழுவினர் தஞ்சாவூரிலிருந்து வருகின்றார்கள் என்றால் இதரமாவட்டங்களில் தனி மதிப்பு தான். தஞ்சை மாவட்டத்தின் எந்தப் பகுதியில் வாழும் கலைஞர்களும் தஞ்சாவூரில் தொடர்பு வைத்திருப்பார்கள். தாங்கள் கற்ற வித்தையை தஞ்சாவூரில் அரங்கேற்ற செய்வதனை பெருமையாக எண்ணினார்கள். திருச்சிமாநகரமே தமிழகத்தின் மைய நகரம். தஞ்சாவூரோ திருச்சியிலிருந்து கிழக்கில் 30 கல் தொலைவில்தான் இருக்கிறது. எனவே தஞ்சாவூரும் தமிழகத்திற்கு ஓர் மையநகரமே. இதுவும் அங்கிருந்து கலைஞர்கள் பல பகுதிகளுக்கு சென்று வர வசதியாக இருந்தது. வெளியூர்காரர்கள் வந்து போகவும் செய்தார்கள். கல்விகலைகள் தஞ்சை மாவட்டத்தில் வளர்ந்திருந்தது. அதற்கு அம்மாவட்ட வளமையே காரணம்.

தஞ்சை மாவட்ட இதர நகரங்களின் அமைப்பிற்கும் தஞ்சையின் அமைப்பிக்கும் பெரும்வேறுபாடு உண்டு. பெரும்பாலும் கோயிலை மையமாக வைத்து ஊர்கள் இருக்கும். தஞ்சாவூரோ அரண்மனையை மையமாக வைத்து ஊர் அமைந்திருந்தது. அரண்மனையின் ராச வீதிகளுக்குஅப்பால் தென்மேற்கு பகுதியில் தஞ்சைப் பெருங் கோவில் என அழைக்கப்படும் ஆவுடையார் கோவில் (பிரகதீசுவரர் ஆலயம்) உள்ளது. இக் கோவிலும் இதர கோவில்களின் அமைப்பு போல் இல்லாது சற்று மாறுதலாக அமைந்துள்ளது. இங்கு முன் உள்ளே ராச கோபுரத்தைவிட கருவறை மீது கட்டப்பட்டுள்ள விமான கோபுரமே உயரமாக இருக்கும். தமிழகத்திலேயே உயரமான விமான கோபுரமாகும் அது, கம்பீரமாக காட்சியளிக்கும் அவ்விமான கோபுரத்தின் கலச நிழல் தரையில் விழுவதில்லை. ராஜராஜ சோழரது ஆட்சிகால பொறியாளர்களின் திறமைக்கு அது சான்று. கோவிலைச் சுற்றி அகழி இருக்கும். அரண்மனையைச்சுற்றி கிடையாது.

இந்த நகரத்தின் புறப்பகுதியில் திருவையாறு செல்லும் வழியில் உள்ள கருந்தட்டான் குடி என்ற இடத்தில் காவேரி கரையருகே அமைந்துள்ள வீதி ஒன்றில் வாழ்ந்து வந்தார் நாதசுரம் சுந்தரம் பிள்ளை பரம்பரை மேளக்காரர். நல்ல ஞானஸ்தர். பிரபலமாக இருந்தவர் என்று சொல்ல முடியாது. எனினும் அந்த நாளில் பிரபலமாக இருந்த நாதசுரக் காரர்கள் இவருக்கு மதிப்பு கொடுப்பார்கள் கைராசிக்காரர் என தஞ்சை மற்றும் சுறுப்புறமுள்ள கிராம பெருங் குடும்பத்தார் எல்லாம் தங்கள் இல்ல விழாக்களுக்கு நாதசுரம் வாசிக்க இவரைத்தான் அழைப்பர். சன்மானமும் அவர்கள் வசதிபோல் பெற்றுக் கொள்வார். சில திருக் கோவில்கள் உற்சவங்களுக்கும் வழக்கமாக சென்று வருவார்.

இவரது மூத்தமகன்தான் நமது கதாநாயகன் சுவாமிநாதன் மகன் மீது மிகுந்த அன்பு உண்டு. அதைவிட அவன் பெரிய கலைஞனாக வர வேண்டும் என்ற ஆசை உண்டு. இவரது மனைவி பாக்கியத்தம்மாள் மீது பிள்ளைக்கு மதிப்பு உண்டு. என்றாலும் வாசமெல்லாம் அதே கருந்தட்டான் குடியில் இருந்த பழைய நடனக்காரி நவநீதம் வீட்டில்தான். எனினும் தன் மகனோ உறவினரோ தன்னை அங்கு வந்து பார்ப்பதனை விரும்ப மாட்டார்.

நவநீதத்திற்கு குழந்தைகளோ உறவோ கிடையாது. அவளுக்கு எல்லாமே சுந்தரம் பிள்ளைதான். சுவாமிநாதனை தனது மகனாக வைத்திருந்தாள். தனது சொத்துக்களை தனக்குப்பின்அவனுக்குத் தான் எழுதிவைத்திருந்தாள். என்றாலும் சுந்தரம் பிள்ளைக்கு பயந்துகொண்டு அவனிடம் அதிகம் பேச மாட்டாள்.

சுந்தரம் பிள்ளைக்கு தினசரி இரவு படுக்கை நவநீதம் விட்டில் தான். ஆனால் விடியக்காலை எழுந்து தனது வீட்டிற்கு வந்து விடுவார். இரவே அடுப்பில் நாலு தணலை வைத்து ஆட்டுக்கால் சூப்பை வைத்திருப்பார். அதனை எடுத்து தானே தாழிப்பார். பின்னர் சுவாமிநாதனை எழுப்பி கை கால் கழுவச் சொல்லி சூப்பை சாப்பிடச்சொல்வார். சுருதிபெட்டியை வைத்துக்கொண்டு பாடச் சொல்வார். அவன் பாடிக்கொண்டிருக்கும் பொழுது வெற்றிலைச் சீவல் போட்டுக்கொண்டு இருப்பார். பின்னர் சுமார் 1 மணி நேரம் கழித்து உறியிலிருந்து ஒரு அகப்பையல் வெண்ணையை எடுத்து வந்து சுவாமிநாதனிடம் கொடுத்து, 'சுவாமிநாதா அதனை அப்படியே விழுங்கு' என்பார். அவனும் அதனை வாங்கி வாயில் போட்டு ருசிகூட பார்க்காமல் விழுங்குவான். அவன் செய்த சாதகத்தில் ஏறியிருக்கும் தொண்டை சூட்டில் வெண்ணை நெய்யாகஉருகி உள்ளே போகும்!

பின்னர் மகனை அழைத்துக் கொண்டு காவிரி படித்துறைக்கு செல்வார். இருவரும் குளித்து சேர்ந்தே விட்டுக்கு வருவர். துறைக்கு செலலும் வழியில்தான் நவநீதம் வீடு, இருந்தாலும் அப்பொழுது அந்த வீட்டைத் திரும்பி கூட பார்க்கமாட்டார் சுந்தரம் பிள்ளை. ஆனால் நவநீதத்திற்கோ தன் ஆசை நாயகனும், தத்து மகனும் சேர்ந்து போகும் அந்தக் காட்சியை ஜன்னல் வழியே கண்டால்தான் அன்றைய ஆகாரம் இறங்கும்.

அப்பனும்மகனும் காவேரிக்கு சென்ற பிறகுதான் பாக்யத்தம்மாளுக்கும் மற்ற குழந்தைகளுக்கும் விழிப்பே வரும். எழுந்து வீட்டு வேலைகளைக் கவனித்து பூசைக்கு வேண்டிய ஏற்பாடுகள், உணவு தயாரித்து வைப்பார்கள். சுந்தரம் பிள்ளை தினசரி பூஜை சாமவேதத்துடன் (இசையுடன்) நடைபெறும். சுவாமிநாதன் பூசையில் பாடுவான். பெரும்பாலும் காலைவேளையில் அவர்கள் ஆகாரம் பழய சோறும் மீன் அல்லது கருவாட்டு குழம்பும்தான். விருந்தினர் வந்தால் இட்லி, தோசை இதர சிற்றுண்டி செய்வார்கள்.

பின்னர் சுந்தரம் பிள்ளை வெளியே தொழில் சம்பந்தமாகக் கிளம்பி விடுவார். ஒரு கலைஞனுக்குரிய சகல பந்தாவும் அப்பொழுது அவரது உடையிலும் ஒப்பனையிலும் இருக்கும். தானே சுவாமிநாதனுக்கு அலங்காரம் செய்து தன்னுடன் அழைத்து செல்வார். சுந்தரம் பிள்ளை வேறு கச்சேரிகள் கேட்க சொன்னாலும் சுவாமிநாதனை அழைத்து செல்வார். அங்கேயே அவனுக்கு பல விளக்கங்கள் தருவார். கச்சேரி செய்யும் கலைஞர்களின் ஏற்ற தாழ்வுகளை நாசுக்காக மகனுக்கு சொல்வார். அவ்வாறு அவர் மகனுக்கு சொல்லித்தருவதுமற்றவர்கள் அறியாத வாறு இருக்கும்.

அவ்வாறு ஒருநாள் அவர் மகனை அழைத்து சென்றபோது ஓர் தெய்வீக நிகழ்ச்சி நடந்தது.

தஞ்சை நகரின் வடக்கே திருச்சி மாவட்ட எல்லையிலே கொள்ளிடக்கரையில் உள்ளது திருமானூர். இதற்கு திருவையாறு வழியே செல்லவேண்டும். இங்கு மிகவயதான தனவந்தர் ஒருவர் நீண்டகாலமாக உடல் நலமின்றி படுத்த படுக்கையில் இருந்தார். வைத்தியர்களும் மிகவயதான அவருக்கு இனி ஒன்றும் மருத்துவம் செய்ய இயலாது என்று சொல்லி கைவிட்டு விட்டனர். தந்தையைக் கவனிக்க அவரது ஒரே மகனுக்கும் போதிய நேரமில்லை. அவன் வியாபார அலுவல்களைக் கவனிக்க வேண்டும். எனினும் தனது மனைவி மக்களையும் நம்பாமல் அவன் தனது தந்தையைக்கவனிக்க தனி வேலையாள் வைத்திருந்தான்.

அவரோ தனக்கு அந்திம காலம் இப்படியா பிறருக்கு பாரமாக அமைய வேண்டும் என்று வருத்தப்பட்டுக்கொண்டிருந்தார். நல்ல நாளும் கிழமையும் அவருக்கு உடல்நிலை மோசமாகும். வீட்டிலே ஏதும் கொண்டாட முடியாது. இரவிலும் சரியான தூக்கம் இராது. இருமிக்கொண்டோ முனகிக்கொண்டோ இருப்பார். அவரது உடல்நிலைக் காரணமாக பேரப்பிள்ளைகள்கூட அருகில் வருவது கிடையாது. வேறு தனவந்தர் வீட்டிலிருந்து வந்த மருமகப் பெண்ணைப்பற்றி சொல்ல வேண்டாம். சுருங்கச்சொன்னால் அவருக்கு தற்பொழுது தேவை அமைதியான முடிவு, அதனை இறைவன் தராமல் அவரை வாழ விட்டு வஞ்சித்துக்கொண்டிருந் தான். இத்தனைக்கும் அவர் சன்மார்க்க நெறியில் வாழ்ந்தவர். யாருக்கும் தீங்கு செய்தவரில்லை. இராமலிங்க அடிகளார் மீது நிறைந்த பக்தி உடையவர். அருட்பாவில் திளைத்தவர். திருமானூருக்கு மேளக்காரர்கள் பலரை அழைத்து நிகழ்ச்சிகள் நடத்தியவர்.

தஞ்சாவூர் சுந்தரம் பிள்ளையும் அந்த முறையில் பழக்கம் ஆனவர். திருமானூர் தனவந்தர் உடல்நிலை கேள்விப்பட்டு ஒரு முறை திருவையாறு வரை வந்த சுந்தரம் பிள்ளை திருமானூர் வந்தார். அப்பொழுது திருமானூர் அருகில் கொள்ளிடம் ஆறு மீது தற்போது போக்குவரத்து வசதிக்காக கட்டப்பட்டுள்ள பாலம் கிடையாது. படகில் ஏறி ஆற்றைக் கடந்துதான் செல்லவேண்டும். சுவாமிநாதனுக்கு 10-12 வயது இருக்கும் அவனும் அப்பாவுடன் திருமானூர் சென்றான்.

தனவந்தர் மகன் அவர்களை வரவேற்றான். தனவந்தர் அவர்களைக்கண்டதும் மிகவும் மகிழ்ந்து "பிள்ளையவர்களே அந்த நாளில் சில சந்தர்ப்பங்களில் தான் அழைத்து கௌரவித்து அனுப்பினேன். இந்த சிறியேனை மறக்காமல் பார்க்க வந்திருக்கிறீர்களே" என்றுசொல்லி ஆனந்தக்கண்ணீர் விட்டார். பின்னர் சுவாமிநாதனைக்கண்டு மகிழ்ந்து தனது மகனை அழைத்து அவனுக்கு பட்டு வேட்டி, துண்டு தரச்சொன்னார். உடனே அதனை அணிந்து வரச்சொன்னார். அவனும் அணிந்து வந்து நின்றான். அதனைக்கண்டு தனவந்தர் 'பிள்ளையவர்களே உங்கள் மகன் சாட்சாத் சுவாமிமலை முருகனாகவே எனக்கு தெரிகின்றான். இரண்டு அருட்பா பாடச் சொல்லுங்கள்'என்றார். சுவாமிநாதனும் தனது இனிய குரலில் அருட்பா பாடல்களைப் பாட ஆரம்பித்தான் அவனது இனிய குரலைக் கேட்டு மருமகள், பேரப்பிள்ளைகள், பணியாட்கள் அனைவரும் அங்கு கூடி விட்டனர். தனவந்தர் அமைதியாகப் பாடல்களைக் கேட்டார். அவரது கண்களில் தாரை தாரையாக கண்ணீர் பெருகியது. அப்படியே அமைதியாகப்படுத்தார்.

சில பாடல்கள் பாடி சுவாமிநாதன் நிறுத்த தனவந்தர் மகன் தனது தந்தையிடம் 'போதுமா' என்று கேட்க அருகில் சென்றான். ஆனால்அவரோ இசையில் கலந்து பின்னர் இறைவனுடன் கலந்து விட்டிருந்தார்.

மகன் சுந்தரம் பிள்ளையிடம் வந்து 'அய்யா உங்கள்மகன்தான் முருகன் வடிவில் வந்து எங்கள் அய்யாவிற்கு சொர்க்கத்தைத் தந்துள்ளான்' என்றான்.

சுந்தரம் பிள்ளைக்கு மகிழ்வதா அழுவதா என்று தெரியவில்லை.

(தொடரும்)




ந. இராமநாதன்,
18, 4வது பிரதான சாலை
இராசா அண்ணாமலைபுரம்
சென்னை 28

TN/MS (S) 260
'IYALLISAI' Musical Bi-Monthly, Printed by T. Thirunavukarasu at Jayalakshmi Art Printers Kavarai Street Vadapalani Madras-26. Published & Edited by M. Lakshmi, 57 South Sivan Koil Street, Kodambakkam. MADRAS - 600 024.

## 'இசையும் சுகமும்'

கவிஞர் கண்ணதாசன்



கவியரசர் கண்ணதாசன் அவர்களது நினைவாக இத்திங்களில் வெளிவரும் ''இயலிசை'' இதழில் அவரது இந்த அரிய கட்டுரையை வெளியிடுவதில் மகிழ்ச்சியடைகிறோம்.

சங்கீதம் மனதை இளகச் செய்கிறது; கல்லைக் கனியாக்குகிறது காலட்டு பாடினால் தூக்கம் வருகிறது; சோக கீதம் பாடினால், அழுகை வருகிறது; காமரசப்பாட்டில் உணர்ச்சி வெறி ஏறுகிறது. கடவுள் பக்திப்பாடலில் நெஞ்சம் நெருகுருகுகிறது.

நமது கடவுள் வடிவங்கள் அனைத்துக்குமே. 'இசை' ஆதார வடிவமாக நிற்கிறது. வீணை இல்லாத கலைமகளா? மத்தளம் இல்லாத நந்தியா? புல்லாங்குழல் இல்லாத கிருஷ்ணனா? தம்புரா இல்லாத நாரதரா? நாட்டியம் ... நடராஜரா?

விஞ்ஞானத்தில் ஒரு உண்மை உண்டு. சிலவகையான கலைகள் உடம்பை ஆட்டிப்படைக்கின்றன. நான்கு வேதங்களையும் ஓதும்போது நான்கு வகையாக ஓதுகிறார்கள். அந்த ஒலி அலைகள் வானவெளியையும், சுவாசிக்கின்ற காற்றையும் சுத்தப்படுத்துகின்றன. 'ஓம்' என்ற பிரணவ மந்திரத்தைக் கூட்டாக உச்சரிக்கும்போது, அந்த ஒலி இயற்கையில் எதிரொலிக்கின்றது. அவரைக் கொடிக்கு சங்கு ஊதினால், அது நன்றாக காய்க்கிறது. இடைவிடாத கோவில் மணியோசையில் காற்றே சங்கீதமயமாகிவிடுகிறது.

வீணை, வயலின், கிதார் போன்ற நரம்புக்கருவிகளில் பிறக்கும் இசை, காது நரம்புகளைச் சுகப்படுத்தி, இதயத்தை மென்மையாக்குகின்றது பூபாளம் பாடிக்கொண்டே பொழுது விடிகிறது. ஆனந்த பைரவி பாடிக்கொண்டே உலகம் இயங்குகிறது. நீலாம்பரி பாடிக்கொண்டே தூங்கப்போகிறது. மல்லாரிராகம் வாசித்தால், சுவாமியின் ரதம் கிளம்புகிறது. அமிர்த வர்ஷிணி பாடினால், மழை பொழிகிறது. புன்னாக வராளி பாடினால், பாம்புகூட படம் எடுத்து ஆடுகிறது. அறிவற்ற ஜந்துக்களையும், அசையாப் பொருட்களையும்கூட இசை தன் வசப்படுத்திக் கொள்கிறது.

அந்த இசையின் மூலமும், நாட்டியத்தின் மூலமும் இயற்கையாகவே ஒரு நிம்மதியை மனிதன் பெற முடியும். ஆனால் இசை சுதி சுத்தமாக இருக்கவேண்டும். நாட்டியம் ஆடும்பெண், பார்ப்பதற்கு லட்சணமாக இருக்கவேண்டும் பதம் பாடுகிறவர்கள், புரியும்படி பாடவேண்டும். பக்கவாத்யங்கள், சுகமான இசை எழுப்பவேண்டும். கோரமான வர்ண விளக்குகள் கண்ணைக் கெடுக்கக்கூடாது.

நாட்டியம் ஆடுபவர்கள் பச்சை, மஞ்சள், சிவப்பு, இளம் வெள்ளை முதலிய ஆடைகளையே அணிந்திருக்க வேண்டும். இசையும், நாட்டியமும் ஒன்றைவிட்டு ஒன்றைப்பிரிக்க முடியாதபடி இருந்தால், அதைப் பார்ப்பவனையும் கேட்பவனையும் அதைவிட்டுப் பிரிக்கமுடியாது. அந்த லயத்தின் பெயரே, சுகம்; அந்தச் சுகத்தில் கிடைப்பதே நிம்மதி,

திருமண வீட்டில் தாலி கட்டும்போது வாசிக்கப்படுவது ஆனந்த பைரவி அந்த நேரத்துக்கு அது எவ்வளவு பொருத்தமான ராகம்! அந்த ராகம் காதில் விழும்போதே, கவலைகள் மறந்து போய் விடுகின்றன.

மேல் நாட்டு இசை என்ற பெயரில் டவரா, டம்பளர்களைப் போட்டு அடித்து, உயிரை வாங்குகிறார்கள். இப்போது வாத்தியங்களிலும் அவலமான வாத்தியங்கள் சில உண்டு; அவை தாரை தப்பட்டை, கொம்பு முதலியவை. அவை வெறியை எழுப்புகின்றன. போர் வீரனையும், யானைகளையும் கிளப்பிவிடவே அந்நாளில் அவை பயன்படுத்தப்பட்டன.

ஊதுவத்தி வாசனையில்கூட மங்கலம், அமங்கலம் என்ற இரண்டு வகை உண்டு. ஒருவகையான ஊதுவத்தி இறந்துபோனவர்களின் சடலத்தின் அருகே வைக்கப்படுவது; மற்றொன்று சுப காரியங்களுக்குப் பயன்படுத்தப்படுவது. அதுபோலவே வாத்தியங்களிலும் அமங்கலம் உண்டு. கச்சேரியில் அமங்கல ராகங்களைப் பாகவதர்கள், பாடாமல் இருப்பது நல்லது. முகாரி ராகம், கேட்பவனுக்கு நாளையப் பொழுதைப் பற்றிய கவலையை எழுப்புகிறது. இன்ப ராகங்கள் நம்பிக்கையை உண்டாக்குகின்றன.

வீட்டிலே தகராறு; நிம்மதி இல்லை என்றால் கலை நிகழ்ச்சிகளில் போய் உட்காருங்கள். நமது இசையில் பக்தி ரஸத்தோடு காமரசமும் அதிகம் கலந்திருப்பதற்குக் காரணம் இதுதான். ஞானத்தைப் போலவே காமமும் ஒரு நிலை யோகம். சிற்றின்ப ரசம் ஒரு வகையான நம்பிக்கையை ஊட்டுகிறது.

கண்ணனைப்பற்றிப் பாடிய ஆண்டாளும் காதல் உணர்ச்சிகளையே ஒரு வகை ஞானமாக வெளியிட்டாள்; அல்லது ஞானத்தைக் காதல் வழியே காட்டினாள். கட்டியணைத்தேன்; முத்தம் கொடுத்தேன்' என்றெல்லாம் பாடப்படும் காதல் பாடல்கள் நிம்மதியற்ற லௌகிகனுக்கு ஒரு நிம்மதி ஏற்படுத்தவே ஏற்பட்டன.

இன்ப உணர்வின்போது பல பிரச்னைகள் மறக்கடிக்கப்படுகின்றன. அதை இசையிலேயே கேட்கும்போது கேள்வி சுகமேகூடப் போதுமானதாக இருக்கிறது.

கண்டு, கேட்டு, உண்டு, உயிர்த்து அனுபவிப்பதைவிட இசைக் காமத்தில் ஆன்மாவுக்கே ஒரு லயம் இருக்கிறது. சுகமான சங்கீதம். சுகமான பாடல் - நெஞ்சுக்கு நிம்மதி.

('நெஞ்சுக்கு நிம்மதி' என்ற புத்தகத்திலிருந்து ஒரு பகுதி)

## கலைப்படைப்புக்கள்

புத்தகம் பெயர்: இந்திய நாட்டியத்தின் திராவிட மரபு.

ஆசிரியர்: திருமதி கார்த்திகா கணேசர்.

வெளியீடு: தமிழ்ப் புத்தகாலயம். 280 பக்கங்கள். ரூ. 18/-

ஆடற்கலை பற்றிய தன்னுடைய மூன்றாவதான இந்நாலின் ஆசிரியை தன் ஆராய்ச்சியின் விளைவுகளை வாசகர்களுடன் பகிர்ந்து கொள்ளுகிறார். இதில் தூய ஆடல் மற்றும் அபிநயம் இணைந்த நிருத்தியம் சமுதாயத் தேவைகளினால் அடைந்துள்ள வளர்ச்சி, கேரள நாட்டில் பிரபலமாகியுள்ள மோகினியாட்டம் மற்றும் கதகளி போன்ற ஆடற்கலைகளுக்கே உரித்தான விசேஷ ஒப்பனை மற்றும் அபிநய வகைகள் நான்கு வகை அபிநயங்கள் ஏழு வகை நிருத்தங்களின் விளக்கம், பழங்குடி மக்களிடையே மற்றும் சிந்துசமவெளி நாகரிக காலத்தில் ஆடல் பாடல் தோன்றி வளர்ந்த வரலாறு, நாட்டிய சாஸ்த்திரத்தின் தோற்றம், கிரேக்க இலக்கியங்களில் நாடகக் கலைப்பற்றிய குறிப்புக்கள் போன்ற பலதரப்பட்ட அரிய பொருட்கள் விவாதிக்கப்பட்டுள்ளன. பழையன என்பதாலோ சிறந்தவை என்றோ அல்லது புதியன என்பதாலேயே கண்டிக்கப்படவேண்டுமென்றே கருத்துக்களை மறுக்கும் ஆசிரியை தன் நாட்டியப் படைப்புகளில் புகுத்திய புதுமைகளையும் மற்றும் அரங்க அனுபவங்களையும் சுவைபட விளக்கியுள்ளார்.

தகவல்: ஹிக்கின் பாதம்ஸ், சென்னை-2

## கடம் அருணகிரிக்கு பாராட்டு

வடாற்காடு குடியாத்தம் வட்டத்தில் இசைத் தொண்டு ஆற்றி வருபவர் கடம் D C. அருணகிரி இவர் இசைக்கலைஞர்சங்கத்திற்கு துணைத்தலைவராகவும்பணியாற்றி வருகின்றார். அந்த வட்டத்திற்கு நல்ல கலைஞர்களை அழைத்து நிகழ்ச்சிகள் எற்பாடுசெய்கின்றார்

இவருக்கு ஒடுக்கத்தூர் வேப்பங்குப்பம் கிராம இந்து சமய இறைபணி மன்ற பத்தாம்ஆண்டு நிறைவு விழாவில் பொன்னாடை போர்த்தினார் மன்றசெயலர் திரு. ராஜகோபால் செட்டியார். விழாவில் தெலுங்கில் இசைச் சொற்பொழிவுசெய்ததிருப்பதி L.பாண்டுரங்க பாகவதருக்கு மன்ற தலைவர் H.வேணு நாயுடு பொன்னாடை போர்த்தி பாராட்டினார்.

## ஒடுக்கத்தூரில் ஸ்ரீராம நவமி விழா

வேலூர் வட்டம் ஒடுக்கத்தூர் கிராமம் அருள்மிகு கோதண்டராமர் ஆலயத்தில் ஸ்ரீராம நவமி 6-வது ஆண்டு விழா பல நாட்கள் நடைபெற்றது. பல கலைநிகழ்ச்சிகள் ஏற்பாடுசெய்யப்பட்டிருந்தது. முதல்நாள் ராஜபாளையம் குமாரி ஜி. எஸ். கோமதி பாடினார். புதுக்கோட்டை எஸ். அம்சவேணி-பிடில் சென்னை என் எஸ். ராஜம்-மிருதங்கம், குடியாத்தம் டி. சி. அருணகிரி-கடம் வாசித்தனர். 7ம் நாள் சென்னை எம். சங்கரன் குழுவினர் பாடினார்.

## கடிதங்கள்

வியாபார நோக்கில் வெளிவரும் இதழ்களோடு தங்களின் இலட்சிய இதழை நிச்சயமாக ஒப்பிடமுடியாது. இசைக்காக ஒரு இதழை இத்துணைச் சிறப்போடு தொடர்ந்து கொண்டுவருவது அரிதான செயலாகும்.

—இராம. ராகவேந்திரன், சென்னை-14

முன் இயலிசையில் ஆஞ்சநேயர் பாடல்களை பார்த்தேன். 1 6-84 இதழில் மீனாட்சியம்மன் பாடல். இவைகள் மிகவும் நன்றாகவே இருக்கின்றன. இப்படி பல பாடல்களை எழுதுபவர்கள் விருப்பப்பட்டால் இசைத்தட்டிலோ இசைச்சுட்டியிலோ (காசட்) இலவசமாகப் பாடி தருகின்றேன்.

கான பூஷணம் M. கஸ்தூரிபாய்
பாலக்காடு

தாங்களனுப்பும் இயலிசை பத்திரிகை என்னைப் போன்று இசையினையே தொழிலாக்க் கொண்டவர்களுக்கு மிகவும் பயனுள்ளதாகவும், நன்மை பயக்கும் தன்மையுடையவதாகவும் விளங்குகின்றது.

சங்கீதபூஷணம் P. S. அழகிரிசாமி
வளவனூர்